யாரும், 'ஓதுவது வேதம்,' என்று கூறினர். ஆதலின்,) ஓதுதல் - படிப்பது, வேதம் - வேதமே, என்னும் - என்று ஔவையார் கூறும், மொழி தவறுது - நீதிவாக்கியத்தை விட்டு நீங்காமல், உறு - வேத மோதுதலாகிய அவ்வழியிலே பொருந்துகின்ற, பரிபூரணரோடு - கிருபாபரிபூரணருடனே, மா - சிறந்த, தவம் - தவத்தினையுடைய, வேதபாராயணர்தாமும் - வேதபாராயணரும், மகிழ்வொடு - சந்தோஷத்துடனே, இத்தலம் மருவி - இந்தத் தலத்தைச் சார்ந்து, மாது - தெய்வமாதர்களுக்குட் சிறந்த பெண்மணியாகிய, உமையுடன் - உமாதேவியுடனே, ஐம்முகனை - ஐம்முகனாகிய நின்னை, பூசித்து-பூசனை செய்து வணங்கி, வான் - சிறந்த, கதி - மோக்ஷகதியை, அடைந்தது - சார்ந்தது, திறமாம் - நிச்சயமாம். (ஆதலின், யானும் அவ்வாறே நின்னைப் பூசித்து நற்கதி யடைவேன்.)

(வி - ரை.) ஆதிசத்திசகாயகனே! 'ஓதுவது வேதம்,' என்று ஔவை கூறிய நீதிப்படி வேத மோதுகின்ற கிருபாபரிபூரணரும், வேதபாராயணரும் இத்தலத்திற் சார்ந்து உமாதேவியையும் நின்னையும் பூசித்து மோக்ஷத்தை யடைந்தது நிச்சயமாதலால், யானும் அவ்வாறே செய்து நற்கதி பெறுவேன் என்பது இதன் கருத்து. (௧0.அ)

---

## ஆக்கியோன் பெயர்.

109. ஔவைபா ருரைத்த நீதிச்சொன் னூற்றெட்
டதனையோ ரறுபத்து மூவர்
செவ்வையார் பெரிய புராணமாக் கதையைச்
சேர்த்துக்கோ ப்புருப்பத மாலை
யெவ்வமார் பிறவி யொழிந்திட வுலக
ரிசைத்தனன் பழனிநன் கருளுஞ்
செவ்விசே ராறு முகனெனுங் கல்வித்
திறனுறு மரியபா வலனே.

(இ - ள்.) ஔவையார் - மூதாட்டியாராகிய ஔவை, உரைத்த - கூறிய, நீதிச் சொல் - ஆத்திசூடி யென்னும் நூலிற் பொருந்திய நீதிவாக்கியங்கள், நூற்றெட்டதனை - நூற்றெட்டையும், ஓர் - ஒப்

பற்ற, அறுபத்துமூவர் - சிவனடியார்களாகிய அறுபத்துமூன்று நாயன்மார்களது, செவ்வை ஆர் - நேர்மை பொருந்திய, மா - சிறந்த, பெரியபுராண கதையை-பெரியபுராண சரித்திரங்களையும், சேர்த்து-கூட்டி, கோபருப்பதமாலை - கோபர்வதமாலை யென்னும் இந்நூலை, (பக்தியுடனே படித்து) உலகர் - உலகத்தி லுள்ளவர்கள், எவ்வம் ஆர் - துன்பம் பொருந்திய, பிறவி ஒழிந்திட - பிறவிநோய் நீங்கும் பொருட்டு, பழனி - பழனிபூபதி யென்பான், நன்கு அருளும் - நன்றாகப் பெற்றருளிய, செவ்வி சேர் - அழகு பொருந்திய, ஆறுமுகன் என்னும்-ஆறுமுகன் என்கின்ற, கல்வித் திறல் உறும் கல்வி வல்லமை பொருந்திய, அரிய பாவலன் - அருமையாகிய பாவில் வல்லவன், இசைத்தனன் - கூறினன்.

(வி - ரை.) பழனிபூபதி யருளிய ஆறுமுகனென்னும் பாவலன், ஔவையா ருரைத்த ஆத்திசூடி நீதிவாக்கியச் சொற்கள் நூற்றெட்டினையும், அறுபத்துமூன்று நாயன்மார் சரித்திரங்களையும் சேர்த்து, கோபருப்பதமாலையென்னும் இந்நூலை, உலகத்தி லுள்ளார் படித்துப் பிறவித்துன்ப நீங்கி உய்யும்பொருட்டு இயற்றினன் என்பது இதன் பொருள். (க0கூ)

ஆத்திசூடிப்புராண மென்னும்
கோபர்வதமாலை மூலமும் உரையும்
முற்றுப்பெற்றன.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பெரியபுராண வரலாறு.

இது சிவனடியவர் மகாத்மியஞ் சொன்ன நூல். இதனை இரண்டு காண்டம் பத்துச் சருக்கம் கொண்ட விருத்தச் செய்யுட்களால் சேக்கிழார் சுவாமிகள் விரித்தருளிச் செய்தனர். இது ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த திருத்தொண்டத்தொகையை முதனூலாகவும், நம்பியாண்டார் நம்பிஅருளிச் செய்த திரு அந்தாதியை வழிநூலாகவும் கொண்டது.

## பெரியபுராண நூலாசிரியராகிய சேக்கிழார் வரலாறு.

இவர் தொண்டைமண்டலத்துக் குன்றத்தூரில் சேக்கிழார் குடியென்னும் சைவவேளாளர் குடியிற் குன்றத்தூர் கிழாருக்குப் புத்திரராய் அவதரித்துக் கல்வி கேள்விகளில் வல்லவராய் இருந்தனர். ஒருநாள் இவர் தந்தையைச் சோழன், 'உலகப் பொருள்களுள் எது பெரிது?' என்று வினவ, குன்றத்தூர்கிழார் விடைதர மயங்கி வீடு வந்து கவலையுடன் இருக்கச் சேக்கிழார் கண்டு நடந்ததை வினவி, "காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும், ஞாலத்தின் மாணப் பெரிது" என்னும் திருக்குறளை எழுதித் தரப் பெற்றுச் சோழனுக்குக் காட்டினர். சோழன் அதிக களிப்படைந்து சேக்கிழாரை வருவித்துத் தனது சமஸ்தான வித்வானும் மந்திரியும் ஆக்கினன். சேக்கிழார், சோழனிடம் இருக்கையில், சோழன் சைநநூலாகிய சீவகசிந்தாமணியைக் கேட்டுக் களிப்புடன் இருக்கையில், இவர் வெறுப்புடனிருக்கக் கண்டனன். இவர் வெறுப்புடனிருக்கக் கண்ட சோழன் அவ்வகை யிருப்பதற்குக் காரணம் வினவ, சேக்கிழார், 'சிந்தாமணி பொய்க்கதை, மெய்க்கதை கேட்க வேண்டும்,' என்றனர். அரசன், 'அக்கதை யாது?' என, சேக்கிழார், 'அது திருத்தொண்டர் புராணம்,' என்றனர். ஆயின், 'கூறுக,'

என, 'அதைக் கேட்க நல்ல சுபமுகூர்த்தம் ஏற்படுத்துக
அரசனிடம் விடைபெற்றுச் சிதம்பரஞ் சென்று, நடராஜ
யைத் தரிசித்து நிற்கையில், அசரீரி "உலகெலாம்," எ
லெடுத்துத் தர, அதனையே முதலாகக் கொண்டு(சஉஅ௩)செ
ளால், திருத்தொண்டத்தொகையை முதனூலாகவும், பெ
பிள்ளையார் இயற்றிய நம்பியாண்டார் நம்பிகள் அருளிய கலி
யந்தாதியை வழிநூலாகவும் கொண்டு திருத்தொண்டர் பு
ணத்தைப் பாடி முடித்துச் சோழனுக்கு அறிவித்து, ஒருவருஷ
சந்நிதானத்திலிருந்து அரங்கேற்றினவர். இவரைச் சோ
யானைமீதிருத்தி, தான் பின்னிருந்து கவரி வீசிச் சென்
இவர்க்குச் சோழன் தன் பெயரையே பட்டமாகக் கொடுத்
அதனால் இவர்க்கு உத்தமச்சோழப் பல்லவராயர் என ஒரு
ருண்டு. அரசனுக்கும் இதுவே பெயராய் இருக்கலாம். இவ
சேவையர் காவலர் எனவும், அருண்மொழித்தேவர் எனவும்,
டர்சீர் பாவவல்லார் எனவும் பெயர். இவருக்குப் பாலறுவாயர்
ஒரு சகோதரர் இருந்தனர். இவர் தமது குன்றத்தூரில் ம
கம் ஏற்படுத்திச் சோழநாட்டில் உள்ள திருநாகேச்சுரம
திருத்தலம் உண்டாக்கிச் சிவகதி பெற்றவர்.

---

